REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: [illegible]

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: பங்குனி 13உ திங்கள் (26—3—56) ★ ★ வெளியூர்: பங்குனி 14உ செவ்வாய் (27—3—56) [இதழ் 242

## சோவியத் ரஷ்யாவில் ஆங்கிலம்

முக்கிய அயல்நாட்டு மொழியாக மாறிவிட்டதாம்!

சோவியத் ரஷ்யாவில் இப்போதுள்ள முக்கியமான அயல் நாட்டு மொழியாக ஆங்கிலம் மாறிவிட்டதாம்!

அங்குள்ள மக்களும் குறிப்பாக லட்சக்கணக்கான மாணவர்களும் மற்ற மொழிகளைவிட ஆங்கில மொழியையே அதிகமாகக் கற்று வருகின்றனராம்.

இது தவிர, பல்லாயிரக்கணக்கான ஆங்கிலப் புத்தகங்களும், இலக்கியப் புத்தகங்களும் அதிகமான அளவில் பிரசுரிக்கப்பட்டு[illegible]

(4-ம் பக்கம் பார்க்க)

# திரு—தமிழக தேவஸ்வங்களின் உரிமைகள் பறிபோகிறது!

## தாய்த் தமிழகத்துடன் இணையும் பகுதிகளுக்கு நிதி ஒதுக்குவதில் அநீதி

### வீண் வெறுப்பை வளர்க்கக்கூடும் என திரு—தமிழக எம். எல். ஏ. எச்சரிக்கை

"திரு-கொச்சியில் சுமார் 1,500 தேவஸ்வங்களிருக்கின்றன. மேஜரும் மைனருமான சுமார் 1,500 தேவஸ்வங்களுக்கும் திரு—கொச்சி அரசாங்கத்தால் ரூ 51 இலட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

"இந்த ரூ 51 இலட்சத்தில், ரூ 6-இலட்சம் தனியாக பத்மனுபசுவாமி கோவில் தேவஸ்தானத்திற்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இதர எல்லா தேவஸ்வங்களுக்கும் ரூ. 45 இலட்சம் மானியமாக உண்டு.

"ஆனால் இப்போது ராஜ்ய சீரமைப்பின்படி சுமார் 500 தேவஸ்வங்களைக் கொண்ட (சரியாகப் பார்த்தால் 488 தேவஸ்வங்களைக் கொண்ட) திரு-தமிழகப் பகுதிகள் சென்னையோடு இணைய இருக்கிறது.

"தாய்த் தமிழகத்துடன் இணைய இருக்கும் இந்தத் தமிழ்ப் பகுதி தேவஸ்வங்கள் 488-க்கும் நீதிபூர்வமாக—நியதிபூர்வமாக பிரஸ்தாப மானியத் தொகையில் மூன்றிலொரு பங்கான ரூ 15-இலட்சம் ஒதுக்கப்பட வேண்டும். அதைவிட்டு, வேறு ஏதோ அடிப்படையில் கணக்கு வைத்து, தாய்த் தமிழகத்துடன் இணைய இருக்கும் திரு-தமிழக தேவஸ்வங்களுக்கு வெறும் ரூ. 4·6 இலட்சம் (அதாவது பத்திலொரு பங்கான நாலரை இலட்சம்) ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் விசித்திரமாகவே இருக்கிறது.

"நீதியையும் நேர்மையையும் முன்வைத்து, திரு—தமிழக தேவஸ்வங்களுக்கு அரசாங்கம் எப்படியும் ரூ. 15 இலட்சம் மானியமாகக் கொடுத்தே ஆகவேண்டும்.

"உரிமைகளைப் பறிக்கும் முறையில் வழிமுறைகள் வகுக்கப்படுவது விரும்பத்தக்கதாகாது; வீண் வெறுப்பை வளர்ப்பதாகவே இருக்கும்"

—என்று, திரு-தமிழக எம்.எல்.ஏ.-வான பி. இராமசுவாமி (பிள்ளை) அவர்கள், பத்திரிகை நிருபர்களிடம் கூறியுள்ளார்.

## 'தேவிகுளம்-பீர்மேடு தமிழ் மக்கள் வெளியேற்றப்படுகின்றனர்'

### 'தலைமுறைகளாக அங்கு வாழ்ந்தவர்கள் அகதிகளாகத் தமிழகத்திற்கு வருவதா?'

அநீதிக்கு ஆளாகும் மக்களுக்காகப் போராட சென்னை எம். எல். ஏ.-க்களுக்கு வேண்டுகோள்

"தேவிகுளம் — பீர்மேடு பகுதிகளை மலையாள மாநிலத்துடன் சேர்த்தது தாங்க முடியாத அநீதி ஆகும். இப்பகுதிகளில் உள்ள தமிழ் மக்கள் தலைமுறை தலைமுறையாக இங்கு வாழ்கிறார்கள். அவர்களின் கோரிக்கையை சர்க்கார் புறக்கணித்தது மிகவும் தவறு.

"இந்த விஷயத்தில் மாகாண புது அமைப்புக் கமிஷனும் வேண்டும் என்றே அநியாயம் செய்து உள்ளது. தேவிகுளம் — பீர்மேடு பகுதிகளில் மலையாள அதிகாரிகள் தமிழர்களுக்குக் கொடுமை செய்துவருகிறார்கள். 'தமிழகத்துடன் சேர வேண்டும்' என்று போராடினால், 'இதுதான் உன் தமிழ் நாடு வாங்கிக்கொள்' என்று மலையாள போலீசார் குண்டாந்தடியால் அடிக்கிறார்கள். இப்போது அங்கிருந்து தமிழர்கள் கட்டாயமாக வெளியேற்றப்படுகிறார்கள்.

"ஆகவே தேவிகுளம்—பீர்மேடு பகுதிகள் தமிழ்நாட்டுடன் கட்டாயம் சேர்க்கப்பட வேண்டும்; அதற்காக மாகாண புதுஅமைப்புச் சட்டம் சட்டசபையில் விவாதத்திற்கு வரும்போது தமிழருக்கு நியாயம் கிடைக்க சென்னை எம்.எல்.ஏ.-க்கள் போராட வேண்டும்.

"டில்லி சட்டசபை உறுப்பினர்களும் தமிழர்களுக்கு நியாயம் கிடைக்கப்போராடுவார்கள் என்று நம்புகிறோம்.

"தேவிகுளம் — பீர்மேடு பகுதிகள் தமிழ் நாட்டுடன் சேர்க்கப்படாவிட்டால் மேற்படி பகுதிகளில் உள்ள தமிழர்கள், அங்கிருந்து விரட்டப்பட்டு அகதிகளாக தமிழ் நாட்டுக்கு வந்து சேர நேரிடும்,"

என்று, தேவிகுளம் — பீர்மேடு பகுதியைச் சேர்ந்த திரு-தமிழர் காங்கிரஸ் காரியதரிசி எம். இராமையா வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் கோரியுள்ளார்.

## 'தேவிகுளம், பீர்மேடு தமிழகத்திற்கே'

### தமிழ்நாடு காங்கிரசும் கோருகிறது

சென்னை, மார்ச். 26—

தமிழ் நாட்டின் முக்கியப் பிரச்சினையாக உள்ள மாநில புனரமைப்புப் பற்றிய மசோதாவை தேவையான அளவிற்கு திருத்தி அமைப்பதற்கான முழு அதிகாரத்தையும் மாநில முதலமைச்சர் காமராசருக்கும், தமிழ்நாடு காங்கிரசின் தலைவர் கக்கனுக்கும் அளித்து தமிழ்நாடு காங்கிரசினர் செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் ஆலோசனையின் பேரில் மத்திய சர்க்கார் விடுத்திருந்த நகல் மசோதாவிற்கு 'பொது ஆதரவு' தருவதாகவும் குழு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது.

குழுக் கூட்டத்தில், உறுப்பினர்கள் அனைவரும், சென்னை மாநிலத்துடன் திரு-கொச்சி தமிழ்ப் பகுதிகளான தேவிகுளம், பீர்மேடு இணைக்கப்பட வேண்டியதின் அவசியத்தை வற்புறுத்திப் பேசியிருக்கிறார்கள்.

## 'தென்னாட்டின் தேவைகளைத் தக்கவாறு பரிசீலனை செய்க'

### 'ரூ. 170·3 கோடி, தேவைகளைச் சமாளிக்கப் போதுமானதல்ல'

2-வது ஐந்தாண்டுத் திட்ட நகல் சென்னை மேல் (சட்ட) சபையில் இரு திருத்தங்களுடன் நிறைவேற்றம்

"சென்னையின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள ரூ. 170.3 கோடி, இந்த மாநிலத்தின் அபிவிருத்தித் தேவைகளைச் சமாளிப்பதற்குப் போதுமானதல்ல."

"தென்னாட்டில் கனரகத் தொழிற்சாலைகளை அமைப்பதற்கான தேவைகளையும், தகுதியையும் தக்கவாறு பரிசீலனை செய்ய வேண்டும்; அதற்காகத் திட்டத்தில் தேவையான தொகை ஒதுக்கப்பட வேண்டும்"

என்ற இரு திருத்தங்களுடன், சென்னை மாநிலத்தின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட நகலை சென்னை மேல் (சட்ட) சபை நிறைவேற்றியுள்ளது.

இரண்டு நாட்களாக நடைபெற்ற விவாதத்தில் 14 உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

விவாதத்திற்குப் பதிலளித்து, தொழில் அமைச்சர் பக்தவத்சலம் பேசுகையில் குறிப்பிட்டதாவது:-

"திட்டத்தின் அளவு தற்போதைய நிலைக்குக் குறைக்கப்பட்டது குறித்து சர்க்காரும் ஏமாற்றம் அடைந்திருக்கிறது. திட்டத்தை அமுலாக்க நிதி வசதிகளைக் காண்பதில்தான் சங்கடம் உள்ளது."

கனரகத் தொழிற்சாலைகளை நிறுவும் பிரச்சினையில் தென்னாடு புறக்கணிக்கப்பட்டுவிட்டது என்று பெரும்பான்மையான உறுப்பினர்கள் குறைகூறியதை பற்றிக் குறிப்பிட்டு அமைச்சர் பேசுகையில், 'இப்பகுதியில் கனரகத் தொழிற்சாலைகளை நிறுவதன் அவசியத்தை மத்திய சர்க்காரிடம் மாநில சர்க்கார் வலியுறுத்தி வருகிறது.' என்றார்.

## அதிலென்ன குறைவு?

தற்போதுள்ள மக்கள் சபை உறுப்பினர்களுக்கு, இரயிலில் பயணம் செய்ய இலவசப் 'பாஸ்' வசதி கிடைக்கிறது; இனி அவர்களுக்கு இலவச 'டெலிபோன்', இலவச விமானப்பயண டிக்கெட் வசதி முதலியனவும் கிடைக்கக் கூடுமாம்! இவற்றிற்காகும் செலவை மக்கள் சபையே ஏற்றுக் கொள்ளுமாம்!

## காங்கிரஸ் ஊழியர்களிடை முச்சந்தி குஸ்தி!

ஊழியர் மாநாட்டில் ஏற்பட்ட மனத்தாங்கலே காரணம்

சில மாதங்களுக்கு முன்னால், கடலூரில் மஞ்சகுப்பம் முசாபுரி பங்களாவில் காங்கிரஸ் ஊழியர் கூட்டம் நடந்தது. அதில் சிற்சில குழப்பங்கள் ஏற்பட்டு கூட்டம் கலைக்கப்பட்டது.

அதிலிருந்து காங்கிரஸ்காரருக்குள் சிற்சில மோதல் ஏற்பட்டுக் கொண்டே இருந்தது.

அதன் விளைவாக 25—3—56 இரவு 8 மணி அளவில் திருப்பாப்புலியூர் லாரன்சி ரோடில் காங்கிரஸ் ஊழியர்கள் இருவர், காங்கிரஸ் ஊழியர் கூட்டத் தகராறின் காரணமாக, ஒருவரை ஒருவர் செருப்பால் அடித்துக் கொண்டார்கள். சுமார் 200,-300 பேர் கூடிவிட்டனர். பிறகு கூட்டத்தில் இருந்தவர்கள் இருவரையும் சமாதானப்படுத்தி, கூடியிருந்த கும்பலையும் கலைத்தார்கள்.

## 'போராட்டக்குழு முடிவு எதுவானாலும் கட்டுப்பட்டு நடப்பேன்'

### கூட்டணித் தலைவர் பி. டி. இராசன் அவர்கள் உறுதி

சென்னை, மார்ச் 23—

சர்வ கட்சி கூட்டணியின் போராட்டக் குழு மவுண்ட்ரோட்டில் உள்ள காஸ்மாபாலிடன் கிளப், கூட்டணித் தலைவர் பி. டி. இராசன் உள்உறையுள்ளில், அவர் தலைமையில் நடைபெற்றது. மாகாண சீர்திருத்த மசோதா சட்டசபையில் விவாதிக்கப்படும் 28-ந் தேதி தினம், தமிழ் மக்களின் கருத்தை சட்டசபை காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு மீண்டும் நினைவுறுத்தும் வகையில் அமைதியாக ஆர்ப்பாட்டங்களை மேற்கொள்ளவேண்டும் என்று தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சிவஞானம் அவர்களும், வேறு இரண்டொருவரும் விழைந்தனர். அவைபற்றிய சாத்தியக்கூறுகள் ஆராயப்பட்டு, முடிவு எடுக்கப்படாமலேயே கூட்டம் அடுத்த தினத்துக்கு ஒத்திவைக்கப்பட்டது.

விவாதத்தின்போது, தலைவர், 'குழு எடுக்கும் முடிவு எதுவானாலும் நான் அதற்குக் கட்டுப்பட்டு நடப்பேன்!' என்று உறுதி கூறினார்.

குறிப்பு:—உண்மை இவ்வாறு இருக்க, செய்தி அளிப்பதில் மேற்கொள்ளப்படவேண்டிய கண்ணியத்தையும், நேர்மையையும் மென்னச் சித்திரவதை செய்துவரும் 'சென்னை—[illegible]' 'மெயில்' ஆங்கில ஏடு, கூட்டணித் தலைவருக்கு [illegible] முறையில், 'நேரடி நடவடிக்கைகளுக்கு எதிராக பி. டி. இராசன்' என்றத் தலைப்பிட்டு, உண்மைக்கு மாறான ஒரு கற்பனைச் செய்தியை வெளியிட்டு இருக்கிறது.

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 26—3—'56 திங்கள்


# இஸ்லாமியக் குடியரசு

காலஞ்சென்ற காயிதே அஃலம் ஜின்னுவின் சிருஷ்டியான பாகிஸ்தான், தனக்கென ஒரு அரசியல் சட்டத்தை வகுத்துக்கொண்டு, இஸ்லாமியக் குடியரசாக மலர்ந்திருக்கிறது. இம் மலர்ச்சிக்கு எட்டு ஆண்டுக் காலம் பாகிஸ்தானுக்குத் தேவைப்பட்டிருக்கிறது.

ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்கக் கடந்த எட்டுஆண்டுக் காலமாக அந்நாட்டில் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பெரும் சோகக் கதையாகும். பெரும் குழப்பத்திற்கும் பயங்கரக் கொந்தளிப்பிற்கும் எங்கு பாகிஸ்தான் உள்ளாகி, என்றென்றும் உருவெடுக்க முடியாத நிலையில் சீரழிந்துப் போகின்றதோ என்ற அச்சம் உலக நல்லறிவாளர்களிடை பலமுறை ஏற்பட்டதுண்டு. அத்தகு சங்கடங்களை எல்லாம் தாண்டிக் கடந்து, அரசியல் சட்டம் ஆக்குவதில் வெற்றி கண்டு, குடியரசாகப் பாகிஸ்தான் பரிணமித்திருப்பது ஒரு பெரும் அரசியல் அற்புதமேயாகும்.

நாட்டுப் பற்றும், மக்கள் நலமும் தங்கள் கட்சியுடன் கூடப் பிறந்த அருபெருஞ் செல்வங்கள் எனக் கூறிக்கொள்ளும் காங்கிரஸ் கட்சியினருக்குள்ளாகவே, ஒவ்வொரு மாகாணத்திலும் பதவிப் போட்டியும், கோஷ்டிப் பூசலும், குழிபறிக்கும் கொடுஞ் செயலும் கோரத்தாண்டவம் புரியத்தானே செய்கின்றன? சென்னை, பஞ்சாப், திரு-கொச்சி, விந்தியப் பிரதேசம், பெப்சு போன்ற மாகாணங்களில் ஆட்சிப் பொறுப்பில் உள்ள காங்கிரஸ் கட்சியினரிடை பதவிப் போட்டிகள் ஏற்படாமலா இருந்தன?

காங்கிரஸ் கட்சியிலுள்ள குட்டித் தலைவர்கள் அனைவரும் கண்டு அஞ்சக்கூடிய நிலையிலும், இருதயப்பூர்வமாக இல்லையானாலும் சுய லாபம் கருதி வெளிவேஷத்திற்காக அன்பு செலுத்தி வரும் சூழ்நிலையிலும், தலைமை அமைச்சர் நேரு போன்ற ஒரு பெரும் தலைவர் உயிருடன் இருக்கும்பொழுதுதான், காங்கிரஸ் கட்சிக்குள்ளாக இவ்வளவு குழப்பங்களும், கொந்தளிப்புகளும் நிகழ்ந்து வருகின்றன. எனவே, தலைவர்கள் எனப்படுவோர் அனைவரையும் கட்டுப்படுத்தக்கூடிய செல்லும் சொல்படைத்த தலைவர்களாக இருந்த ஜின்னுவும், அதற்கு அடுத்த நிலையில் எண்ணப்பட்டுவந்த லியாகத் அலியும் மறைந்துவிட்ட பிறகு, பாகிஸ்தான் தலைவர்களிடை ஒற்றுமை குறைந்து, பிளவு விரிந்து, தலைவிரிகோலம் தாண்டவமாடிற்று என்ருல், அதில் ஆச்சரியம் ஒன்றும் கிடையாது. எட்டு ஆண்டுக் காலமாக முயன்றும் ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்கிக்கொள்ள முடியாது பாகிஸ்தான் திண்டாடிக் கிடந்ததற்கு, மேற்குறிப்பிட்ட நிலையே பெரிதும் காரணமாகும்.

மேற்கு பாகிஸ்தான் பிடிவாதமும், கிழக்கு பாகிஸ்தான் இணக்கமற்ற குணமும், சென்ற எட்டு ஆண்டுகளாக ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்க அந்த நாட்டில் இயலாமற் போனதற்கு மற்ருெரு காரணமாகும். இன்னும் இது போன்ற சில நியாயங்களை, அரசியல் சட்டமியற்றுவதில், அது கண்டு வந்தத் தோல்விகளுக்குரிய காரணங்களாகக் கொள்ளலாம்.

தலைவர்கள் எனப்படுவோரிடை, ஒற்றுமைக் குறைவும், விரிவான பிணக்கும், ஆழப்படிந்திருக்கும் நிலையிலும், அவர்களால் எட்டு ஆண்டுக் காலம் கழிந்தாவது நாட்டுக்கு இன்றியமையாத் தேவையான ஒரு அடிப்படைச் சட்டத்தை இயற்றிக்கொள்ள முடிந்ததே என்பது ஆச்சரியப்படத்தக்கதுடன் மகிழ்ச்சிக்குரியதும் ஆகும். எட்டு ஆண்டுக்காலமாக மூலச் சட்டம் இயற்ற முடியாது போனதில் உள்ள வியப்பைக் காட்டிலும், காலந்தாழ்த்தியாவது பாகிஸ்தானுல் சட்டம் இயற்றமுடிந்ததில் பன்மடங்கு வியப்பு இருக்கத்தான் இருக்கிறது.

இஸ்லாம் மதத்தை பாகிஸ்தானின் அரசாங்க மதமாக அரசியல் சட்டம் ஒப்புக்கொண்டு இருக்கிறது. அது, ஜனநாயகக் கோட்பாட்டிற்கு உகந்தது அல்ல என்று இந்த நாட்டு அரசியல் தத்துவப் பண்டிதர்கள் அங்கலாய்க்கின்றனர். இஸ்லாமை அரசாங்க மதமாக பாகிஸ்தான் மட்டுமல்லாமல் எகிப்தும், தனது அரசியல் சட்டத்தில் ஏற்றுக்கொண்டு இருக்கிறது. எனவே, பாகிஸ்தான் கோரிக்கை எதனடியாகக் கிளம்பியது என்பதில்தான், பாகிஸ்தான் போக்கிற்கு நியாயந்தேட வேண்டும்.

பாகிஸ்தான் மக்களில் மத பக்தி மிகுந்துள்ள பெரும்பான்மையான மக்களிடை நம்பிக்கையையும், திருப்தியையும் உருவாக்க வேண்டும் என்ற நினைப்புடன்தான், இஸ்லாமை அரசாங்க மதமாகப் பாகிஸ்தான் ஒப்புக்கொண்டு இருக்கிறது என்று கொள்வதே முறையாகும். எகிப்தின் ஒத்தப் போக்கும் இதையே உறுதி செய்கிறது.

பாகிஸ்தானின் புதிய முதல் குடியரசுத் தலைவராக, அங்கு இதுவரை கவர்னர்-ஜெனரலாக இருந்துவந்த மேஜர்-ஜெனரல் இஸ்கந்தர் மிர்சா, பதவி ஏற்று இருக்கிருர். இராணுவத் தலைவர் ஆட்சிப் பொறுப்பேற்பது ஆபத்துக்குரியது என்றக் கோட்பாடு முழுதும் தவருனது என்பதை, அமெரிக்கக் குடியரசுத் தலைவரான ஐசனேவரின் நடைமுறை மெய்ப்பித்து வருகிறது. அது போன்றே, மிர்சாவின் தலைமையும், இந்தியா—பாகிஸ்தானுக்கிடை இருந்துவரும் சாதாரண மனமாச்சரியத்தை ஒழித்துக்கட்டி, இருநாடுகளுக்கிடைநட்புறவை மேன்மேலும்வளர்த்து, மேற்கு நாடுகளைக் காட்டிலும் பின்தங்கிக் கிடக்கும் ஆசியப் பகுதியின் மதிப்பை உயர்த்த முன்வர வேண்டும்.

வாழ்க பாகிஸ்தான்! நலம் பல பெருக பாகிஸ்தான் மக்கள்!

## மாநிலங்கள் இணைப்பு எதிரொலி

### 2,030 பேர் கைது

பீகார் — மேற்கு வங்காள இணைப்பை எதிர்த்து நடைபெற்ற சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்து கொண்டதற்காக இதுவரையில் மேவங்கத்தில் 2,030 பேர் கைது செய்யப்பட்டுள்ளனராம்; இவர்களில் கல்கத்தாவில் மட்டும் 1,275 பேர் கைது செய்யப்பட்டுள்ளனராம்.

## விசித்திரமே விசித்திரம்!

பாட்டியாலா, மார்ச் 23—

பெப்சு விதான சபையில், வரவு—செலவுத் திட்டத்தின் மீது முதல் நாள் விவாதம் துவங்கியதும், குறிப்பிட்ட நேரத்திற்கு 2 மணிநேரத்திற்கு முன்பே பேசுவதற்கு உறுப்பினர்கள் இல்லாது போகவே சபை ஒத்திவைக்கப்பட்டு விட்டதாம். சபைத் தலைவர் திரும்பத் திரும்ப அழைத்தும்கூட பேசுவதற்கு எவரும் முன்வரவேயில்லையாம்!

## அமெரிக்கத் தலைவர் இந்தியா வருவார்?

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐசனேவர், இவ்வருட இறுதியில் இந்தியாவுக்கு வருகைதரத் திட்டமிட்டுள்ளாராம்.

இந்தியப் பிரதமர் நேரு, ஜூலைத் திங்களில் அமெரிக்கா வரும்போது இது குறித்து அவரிடம் ஐசனேவர் விவாதிக்கக்கூடுமாம்.

## 'வாய்ப்பூட்டு' போடப்படுகிறதா?

மக்கள் சபையில், திரு-கொச்சி உறுப்பினரான சி. பி. மாத்தன், மாநில சர்க்கார்கள் நதிகள், கால்வாய்கள் அபிவிருத்தியில் போதிய கவனம் செலுத்தவில்லை என்றும், தென்னுட்டு அமைச்சர்கள் 'பதவி வேட்டை' போன்ற பிரச்சினைகளில்தான் அதிகக் கவனம் செலுத்துகின்றனர் என்றும் கூறினர்.

உடனே சபைத்தலைவர் அனந்த சயனம் அய்யங்கார், மாநில மந்திரிகள்—சட்டசபை உறுப்பினர்கள்—கவர்னர்கள் பற்றி மக்கள் சபையில், உறுப்பினர்கள் புகார் கூற வேண்டாமென்றும், கூறப்படும் புகார்களுக்குப் பதில் சொல்ல அவர்களெல்லாம் இங்கில்லை யென்றும் கூறினராம்; தாம் சொன்னதை உறுப்பினர் 'வாபஸ்' பெற்றுக்கொண்டாராம்.

## நைலானிலிருந்து ஈரந் தாக்காத காகிதம்!

ஈரம், இரசாயனப் பொருள், பூஞ்சணம் ஆகியவற்றுல் சேதமடையாத காகிதம் ஒன்றைப் பிரிட்டனிலுள்ள லீஸ்டர் கல்லூரி விஞ்ஞானிகள் தயாரித்திருக்கிருர்களாம்.

நைலானிலிருந்து தயாரிக்கப் பட்ட காகிதமே இம்முறையில் மன நிறைவைத் தந்துள்ளதாம்; இது நீராலும், பூஞ்சணத்தாலும சேதமடையாது.

நைலான் காகித உற்பத்தியில் அமெரிக்காவும், வெப்பப் பிரதேச நாடுகளும் கவனம் செலுத்தி வருகின்றன. இப்புதிய முறை கண்டு பிடிப்பால், இந்தத் தொழிலிலேயே புதுத் திருப்பம் ஏற்படக்கூடுமாம்.

# 22,50,000 பவுன் செலவில்!

## இந்தியாவில் பிளாஸ்டிக் தொழிற்சாலை நிறுவப்படுமாம்

### பிரிட்டிஷ் நிறுவனத்தின் முயற்சி

சுமார் 22,50,000 பவுன் செலவில், இந்தியாவில் ஓர் பிளாஸ்டிக் தொழிற்சாலையை நிறுவுவதற்கு பிரிட்டிஷ் நிறுவனம் ஒன்று திட்டமிட்டிருக்கிறதாம்.

இத்தொழிற்சாலையில் 'பாலிதீன்' என்ற ரக பிளாஸ்டிக் உற்பத்தி செய்யப்படுமாம்; இது சூட்டினுல் மென்மையடைவதுடன் உருகவும் கூடியதாகையால் பல தொழில்களுக்குப் பயன்படுமாம்!

சூடு தாக்குவதால் குணமாறுதல் ஏற்படாது; இந்த ரகப் பிளாஸ்டிக்கிற்கு இந்த நாட்டில் நல்ல கிராக்கி உண்டு.

## ரூ. 5 இலட்சம் செலவில்!

### திருச்சியில் விவசாயக் கருவி உற்பத்தித் தொழிற்சாலை?

திருச்சி நகரிலோ, அல்லது, நகர்ப்புறத்திலோ ரூ. 5 இலட்சம் செலவில், விவசாயக் கருவிகள் உற்பத்திச் செய்யவும், பழுது பார்க்கவும், ஒரு 'சர்வீசிங் யூனிட்' ஏற்படுத்தப்படுமென்று கைத் தொழில் இலாகா துணை டைரக்டர் கே. ஆர். இராசன் கூறியுள்ளார்.

# பெரியாறு நீர்விசை மின்சாரத் திட்டம்

## ஒரு விளக்கம்

தற்போதுள்ள நீர்ப்பாசனத் திட்டத்திலிருந்து தண்ணீரை மின்சார உற்பத்திக்குப் பயன்படுத்திக்கொள்வதற்கே பெரியாறு நீர்விசை மின்சாரத் திட்டமாகும்.

இந்தத் திட்டத்தின்படி, பெரியாறு உற்பத்தியகும் இடத்திற்கு அருகே உயரத்தில் ஒரு ஏரி ஏற்படுத்தப்பட்டுள்ளது. 5,900 அடி நீளமுள்ள ஒரு 'குகைக் கால்வாய் மூலம் தண்ணீர் திருப்பிவிடப்பட்டு, பின்பு 1,000 அடி உயரத்திலிருந்து வைகை நதியில் அத்தண்ணீர் விழுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இந்த நீர் வீழ்ச்சியின் வேகத்தைக் கொண்டே மின்சாரம் உற்பத்தி செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது.

முன்னரே உத்தேசத்திலிருந்த 15,000 'கியூசெக்' தண்ணீருக்குப் பதில் 16,000 'கியூசெக்' தண்ணீர் வந்து விழும்படி குகைக் கால்வாயை அபிவிருத்தி செய்வதென முடிவு செய்யப்பட்டுள்ளது.

இத்திட்டத்திற்கு ஏறக்குறைய ரூ. 10 கோடி செலவாகக்கூடும்.

பெரியாறு தண்ணீரை மின்சார உற்பத்திக்கு சென்னை பயன்படுத்துவது சம்பந்தமாக சென்னை—திரு-கொச்சி சர்க்கார்களுக்கிடையே நீண்ட நாளாக தகராறு இருந்துவந்தது அனைவரும் அறிந்த ஒன்ருகும். 35 கோடி 'யூனிட்'டுகள் மின்சார உற்பத்தி வரை ஒரு கிலோவாட்டுக்கு ஆண்டிற்கு ரூ. 12 வீதமும், அதற்கு மேல் செய்யப்பட்டால் ரூ. 18 வீதம் திரு-கொச்சி சர்க்காருக்குக் கொடுப்பதற்குச் சென்னை சர்க்கார் சம்மதித்ததும் நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

## 'தமிழிலேயே நிர்வாகம் நடைபெறுகிறது'

'திருச்சி மாவட்டத்தில் நீதி, மருத்துவ இலாகாக்கள் தவிர, மற்ற சர்க்கார் இலாகாக்கள் அனைத்திலுமே நிர்வாகம் தமிழிலேயே நடைபெறுகிறது' என்று திருச்சி கலெக்டர் கூறியுள்ளார்.

மக்களுக்கு பழக்கமான ஆங்கில வார்த்தைகளை அப்படியே தாரானமாகத் தமிழில் வழங்கலாம் என அவர் யோசனை கூறினராம்.

# இருதயத்தில் 'சத்ர சிகிச்சை'

## மலிவான இயந்திரம் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது

மனித இருதயத்தை நிறுத்தி, அங்கு 30 நிமிடங்களுக்கு 'சத்ர சிகிச்சை' செய்வதற்கு வசதியாக புதிய மலிவானதொரு இயந்திரத்தை மெல்போர்னைச் சேர்ந்த மூன்று மருத்துவ நிபுணர்கள் கண்டுபிடித்திருப்பதாகத் தெரிய வருகிறது.

'ஆக்சிஜெனரேட்டர்' என்று அழைக்கப்படும் அந்த இயந்திரம், நோயாளியின் இருதயத்திலிருந்து இரத்தத்தை இரைத்து, பிராண வாயுவை உட்செலுத்தி மீண்டும் இரத்தத்தை புகுத்தும் சக்தி கொண்டதாம்.

நோயாளிக்கு சிறிதும் ஆபத்தின்றி 30 நிமிடங்கள் வரை 'சத்ர சிகிச்சை' செய்ய இந்த இயந்திரம் உதவமுடியும் என்று அதனைக் கண்டுபிடித்தவர்களுள் ஒருவரான டாக்டர் ட்ரெவர் க்யூரி என்பார் குறிப்பிட்டிருக்கிருர்.

# மனிதனின் மூளை எவ்வாறு இயங்குகிறது

## திரைப்படமாக எடுக்க புதிய சாதனம்!

சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் போது மனிதனின் மூளை எவ்வாறு இயங்குகிறது என்பதைச் சினிமாப் படமாக எடுக்கும் சாதனம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதாம்.

இப்படத்தைச் சாதாரணமான சினிமாத் திரையில் திரையிட்டுப் பார்த்தால், மனிதனின் மூளை எவ்வாறு இயங்குகிறது என்பது வெளிப்படையாகத் தெரியுமாம்.

# 99 இலட்சம் மாட்டுவண்டிகள்

## இந்தியாவின் போக்குவரத்து சாதனம் பற்றி மக்கள் சபையில் தகவல்

"வேறு எந்த இயந்திர போக்குவரத்து சாதனங்களைக் காட்டிலும் மாட்டு வண்டிகள்தான் இந்தியாவில் இன்னும் அதிகமான சாமான்களை பல்வேறு இடங்களுக்கு எடுத்துச் செல்ல பயன்பட்டு வருகின்றன,"

என்று, டெல்லி அகதி புனரமைப்பு இலாகா முன்னுள் மந்திரி மோகன்லால் சாக்சேனு, மக்கள் சபையில் தெரிவித்திருக்கிருர்.

"1951-ல் 83 இலட்சமாக இருந்த இந்த மாட்டு வண்டிகளின் எண்ணிக்கை இப்போது 99 இலட்சமாக உயர்ந்திருக்கிறது. நாம் இந்தப் போக்குவரத்துச் சாதனத்தைத்தான் இன்னும் இரண்டு—மூன்று தலைமுறைகளுக்கு அதிகமாகி நம்பியிருக்க வேண்டியிருக்கும்,"

என்றும் அவர் தெரிவித்திருக்கிருர்.

# 'கார் ஆடம்பரமான வாகனமல்ல'

## தோழர் சந்தானம் கருத்து

"கார் பணக்காரர்களின் ஆடம்பரச் சாதனம் என்று சொல்லுவது சரியல்ல; உலகில் ஒன்பது கோடி கார்கள் இருப்பதே அவை ஆடம்பரமல்ல என்பதை நிரூபிக்கும்,"

என்று 'ரோட்டரி கிளப்' கூட்டம் ஒன்றில் பேசுகையில் தோழர் டி. எஸ். சந்தானம் குறிப்பிட்டிருக்கிருர்.

இந்தியாவில் 1,50,000 லாரிகளும்—கார்களும் இருப்பதாகவும், அவை நேர்முகமாகவும் துணைமுகமாகவும் 15,00,000 பேர்களுக்கு வேலையளிப்பதாயும் அவர் கூறியிருக்கிருர்.



# 'மூலப் பொருள் மட்டுமே தொழில் வளர்ச்சிக்குப் போதாது'

## 'மனித அறிவும் ஆற்றலும் மிக வேண்டும்'

## 'தென்னுட்டில் தொழில் நிறுவாததற்கு சர்க்கார் கூறும் வாதம் காலங்கடந்ததாகும்'

## 'தென்னுட்டிற்கு முழுவதுமாகவே குரல் கொடுக்கிறேன்'

## சென்னை மேல் சபையில் டாக்டர் இலட்சுமணசாமி இடி முழக்கம்

### தொழில் முன்னேற்றம் பெற்றுள்ள நாடுகளின் நிலையைச் சுட்டிக்காட்டுகிருர்

"ஒரு திட்டத்தை உருவாக்கும்பொழுது அவசியமற்றதும், பெரும் பளுவாக உள்ளதும் மக்களைச் சார விடாமல், ஒருவர் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் வன்மை முதலாளி வர்க்கத்தையும், குறைந்த வருமானம் பெறும் குழுவினரையும் சார்ந்திருக்கவில்லை; நடுத்தர வர்க்கத்தினரையே சார்ந்திருக்கிறது. திட்டத்தின்கீழ், வரிச்சுமையின் பாரம் நடுத்தர மக்களைத் தாக்குவதாக இருக்கும்.

"ஏற்கனவே விதிக்கப்பட்ட வரிகளின் மூலம் கிடைக்கக்கூடிய ரூ. 350 கோடியுடன், அடுத்த ஐந்தாண்டுகளில் ரூ. 450 கோடி வருமானத்திற்கு ஏற்பாடு செய்யப்படும் என்பதின் பொருள், ஒருவரால் சுலபமாகப் பாராட்டுவதற்கு மீறிய நிலையில், மேலும் அதிகமாக வரிச்சுமை இருக்கக்கூடும் என்பதேயாகும். கடந்த 1947-ம் ஆண்டிலிருந்து, இந்த இராஜ்யத்தில், வரிமேல் வரி விதித்து வராத ஒரு ஆண்டுகூட கிடையாது.

"அத்துடன், மத்திய அரசாங்கமும், மறைமுகமாகவும், நேர்முகமாகவும் வேறு சொந்தத்தில் வரிகளைப் போட்டு வருகிறது. அதன் பலனுக வாழ்க்கைச் செலவு கூடிக்கொண்டே போகிறது. அதுவுமன்றி வருமான வரி தரும்நிலையில் உள்ள சிலரின் மீது அப்பளு சுமந்துகொண்டு வருகிறது. அதன் காரணமாக, அவர்களால் முதலாளிகளாக மாற முடியவில்லை. சம உரிமையில் வரி பளுவைத் திணிப்பதில் மத்திய அரசாங்கமும், இராஜ்யமும் ஈடுபட்டுவருவதும் கவலைக்கிடமான உண்மையாகும்.

முதல்முதலாக இந்தியாவில் விற்பனை வரியை புகுத்தியது சென்னை அரசாங்கமேயாகும். அதுவும் ஒரு கட்ட விற்பனை வரியல்ல—பல கட்ட விற்பனை வரியாகும்.

"ஒவ்வொரு இராஜ்யத்தின் வருமான வாய்ப்புகளையும் கண்டறிந்த பிறகு, ஒவ்வொரு இராஜ்யத்திற்கும் மத்திய அரசாங்கத்தால் கொடுபட வேண்டிய உதவித் தொகையை வரையறுக்க ஒரு ஆய்வுக் குழுவை நியமிக்குமாறு மத்திய அரசாங்கத்தை வற்புறுத்துவது, இராஜ்ய அரசாங்கத்தின் அதிகார வரம்புக்கு உட்பட்டதேயாகும்.

"தொழில்களை நிறுவக்கூடிய இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு அடிப்படையான தவறிய கருத்தை, திட்டக் குழு மேற்கொண்டு இருக்கிறது. அதாவது, குறிப்பிட்ட ஒரு தொழிலுக்குத் தேவைப்படும் மூலப் பொருள்கள் கிடைப்பதையும், அல்லது கிடைக்கக்கூடிய மற்ற இயற்கை வசதிகளையும் மட்டுமே கணக்கிட்டு, தொழில்களை நிறுவும் போக்கைக் கையாளுகிறது.

"இக்குறிப்பிட்ட விசித்திர கோட்பாடு பின்பற்றப்பட்டு இருக்குமானுல், பெருத்தத் தொழில் வளம் பெற்றுள்ள நாடுகள், தொழில்துறையில் முன்னேறியே இருக்கமுடியாது. விரிவானதோர் பொருளாதார ஏற்பாட்டில், அக்கோட்பாட்டைத் திணிக்கக்கூடாது.

"ஒரு நாட்டின் பெருத்த செல்வத்தை, பூமியின் பிட்சா பாத்திரத்தில் மட்டுமே கண்டெடுத்துவிட முடியாது. ஆனுல், அச்செல்வம், மக்களின் அறிவாற்றலிலும் செயல் திறத்திலும் ஒளிந்திருக்கிறது.

"இப்பிரச்சினையைக் குறித்துக் கூடுதலாக திட்டக்குழு சிந்தித்திருக்குமானுல், மூலப் பொருள் வசதிகள் கிடைக்கப்பெருத பகுதிகளில் தொழில்கள் நிர்மாணிப்பதை மிக எளிதாக அதனுல் விலக்கி விட்டிருக்க முடியாது.

"சென்னையில் இருபெரும் தொழில்களைத் துவக்குவதற்கான வசதி இருக்கிறது என வரவு—செலவு திட்ட விவாதத்தின்போது நான் குறிப்பிட்டேன். நான் இப்பொழுது சென்னைக்காகவோ, மற்ற ராஜ்யங்களுக்காகவோ பேசாது, தெற்குப் பகுதி முழுவதுக்குமாகவே பேசுகிறேன். இத்துறையில் புதிதாக சிந்தனை செய்யவேண்டியது விரும்பக்கூடியதும் இன்றியமையாததுமாகும்.

"பெருந்தொகையினர் வேலைபற்று இருக்கின்றனர் எனக் கணக்குக் காட்டப்படுகிறது. வேலையின்மை பிரச்சினை வட்டார ரீதியில் தீர்க்கப்படவேண்டும். அப்பிரச்சினைக்குப் பரிகாரம்தேட முயலுவதற்குமுன், சமூக அமைப்பையும் பொருட்டாகக் கொள்ளவேண்டும். வேலையற்றிருப்போர், குறைந்த அளவே பணியில் ஈடுபட்டு இருப்போர் என்பதறிய உண்மையான புள்ளிவிவரம் திரட்டப்பட்டு, பிரச்சினைக்குத் தக்கப் பரிகாரத்தை மேற்கொள்ள வேண்டும். வேலைபற்ருேர் பெரும் எண்ணிக்கையை மட்டுமே பொருட்டாகக்கொண்டு, இப்பிரச்சினையை தீர்க்கலாம் என எண்ணுவதில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்."

—இவ்வாறு, சென்னை மேல்(சட்ட)சபையில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களின் மீது நடைபெற்ற விவாதத்தின் மீது பேசுகையில், சென்னை பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ இலட்சுமணசாமி (முதலியார்) அவர்கள் கூறியுள்ளார்.

## சேலத்தில் அலுமினியம் தொழிற்சாலை

### சாத்தியக் கூறுகளை ஆராய இந்திய சர்க்கார் முயற்சி?

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், சேலத்தில் கிடைக்கும் 'பாக்சைட்'டிலிருந்து அலுமினியம் தொழிற்சாலை துவக்குவதற்கான சாத்தியக் கூறுகளை ஆராய்வதற்காக, இந்திய சர்க்காரின் பிரதம கைத்தொழில் ஆலோசகர் சேலம் சேர்வராயன் மலைகளில் உள்ள 'பாக்சைட்' சுரங்கப் பகுதிகளைப் பார்வையிட்டாராம்.

அங்கு கிடைக்கும் 'பாக்சைட்' மிகச் சிறந்ததென்றும், அலுமினியத்திற்கு மிக உபயோகமானது என்றும் கூறப்பட்டுள்ளது.

## காஷ்மீர் விவகாரம்

### பாக்தாத் ஒப்பந்தக் கூட்டத்தில் பாகிஸ்தான் எழுப்பும்

காஷ்மீர் குறித்து, இந்தியாவுடன் தனக்குள்ள தகராறினைப் பாகிஸ்தான், பாக்தாத் ஒப்பந்தக் கவுன்சில் கூட்டத்திலும் எழுப்பும் என்று அதிகாரபூர்வமாகத் தெரிய வருகிறது.

பாக்தாத் ஒப்பந்தக் கவுன்சில் கூட்டம் வரும் மே திங்களில், தெஹ்ரானில் நடைபெறவிருக்கிறது.

பாகிஸ்தான் பிரதமர் சௌத்ரி முகம்மது அலியே பாகிஸ்தான் பிரதிநிதிக் குழுவின் தலைவராகச் செல்வார் என்றும் கூறப்படுகிறது.

எந்த ரூபத்தில் காஷ்மீர் தகராறு குறித்து அந்தக் கூட்டத்தில் பாகிஸ்தான் பேசவிருக்கிறது என்பது இன்னும் இறுதியாக முடிவாகவில்லை என்றும் கூறப்படுகிறது.

இந்தக் காஷ்மீர் விவகாரத்தைப் பாகிஸ்தான், 'சீட்டோ' என்ற தென் கிழக்கு ஆசிய இராணுவ ஒப்பந்தக் கவுன்சில் கூட்டம் கராச்சியில் அண்மையில் நடைபெற்றபோது எழுப்பியதும், அதை ஒட்டி இந்தியா கண்டனக் குரல் எழுப்பியதும் நினைவிருக்கலாம்.

பக்துனிஸ்தான் அமைக்கும் விவகாரமாக ஆப்கானிஸ்தானுடன் தனக்குள்ள தகராறு குறித்தும், பாகிஸ்தான், பாக்தாத் ஒப்பந்தக் கூட்டத்தில் பேசுமாம்.

## எகிப்து அதிகாரிகளுக்கு இரகசியப் பயிற்சி

எகிப்துக்கு விலைக்குக் கொடுத்துள்ள ரஷ்ய யுத்தத் தளவாடங்களைப் பயன்படுத்தும் விதம் பற்றி, போலந்தில் உள்ள ஒரு இரகசியத் தளத்தில், எகிப்து இராணுவத்தினருக்கு சோவியத் அதிகாரிகள் பயிற்சியளித்து வருகின்றனராம்.

## போர் மூண்டால் துரித நடவடிக்கையாம்!

இஸ்ரேல்—அரபு நாடுகளுக்கிடையே போர் ஏற்பட்டால், அதை அடக்குவதற்கு, வெகு விரைவான முறையில் இராணுவ நடவடிக்கை எடுப்பதற்குப் பிரிட்டனிடம் திட்டம் தயாராக இருக்கிறதாம்; இத்திட்டத்திற்கு அமெரிக்காவும், பிரான்சும் ஆதரவு அளிக்கக்கூடுமாம்.

## உலகத்திற்கே பெரும் அழிவாக முடியுமாம்!

"மத்தியக் கிழக்கில் போர் மூண்டால், அது உலகத்திற்கே ஒரு பெரிய அழிவாக முடியும்"

என்று, அமெரிக்கத் தலைவர் ஐசனேவர் குறிப்பிட்டுள்ளார்.

# கனரகத் தொழில்களைவிட குடிசைத் தொழிலில் வேலை வாய்ப்பு மிகுதியாம்

## மந்திரி பக்தவத்சலம் சப்பைக்கட்டு!

"எல்லா உறுப்பினர்களும், கன ரகத் தொழில்கள் சென்னை மாநிலத்தில்—தென்னுட்டில் அமைக்க வழி செய்ய வேண்டுமென வற்புறுத்தினர். ஆனுல், கன ரகத் தொழில்கள் மட்டும் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையைத் தீர்க்க உதவாது என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

"ஒரு கன ரகத் தொழிலின் அளவான சிறு தொழில்கள், எட்டு மடங்கு அதிகமான வேலை வாய்ப்புகளைக் கொண்டதாகும். எனவே, சென்னை சர்க்கார், பெரும் அளவில் குடிசைத் தொழில்களையும், சிறு தொழில்களையும் துவக்கத் திட்டமிட்டிருக்கின்றனர்.

"ஒரு அலுமினியம் தொழிற்சாலை, காகிதத் தொழிற்சாலை, இரும்புத் தொழிற்சாலை இவை சென்னையில் அமைய வேண்டும் என்று டில்லியிடம் கேட்டிருக்கிறோம். அவர்களும் ஆதரவு தருவதாகக் கூறியிருக்கின்றனர். ஆனுல், இவற்றில் சிலவற்றை தனிப்பட்ட முதலாளிகள் துவக்க வேண்டியுள்ளது. குறிப்பாக, காகிதத் தொழிற்சாலையைத் தனியார் யாரேனும் துவக்கினுல் சர்க்கார் அவர்களுக்கு உதவும்"

என்று, மந்திரி பக்தவத்சலம், பகிரங்கமான அதிருப்திக்கு ஆளாக்கப்பட்ட பின்பும், [illegible] தனது டில்லி எஜமானர்களைக் காப்பாற்றுவதற்காக சப்பைக் கட்டு கட்டினர், மேல் (சட்ட) சபையில்!

# 'சீன இராணுவமே, திபெத்திலிருந்து வெளியேறு!'

'சீன இராணுவம் திபெத்திலிருந்து வெளியேற வேண்டும்' என்று கோரும் சுவரொட்டிகள், ஏராளமாக லாசா நகரிலும், இதர இடங்களிலும் காணப்படுகின்றனவாம்.

இந்தப் 'போஸ்டர்'களை ஒட்டியவர்கள் யார் என்பதைக் கண்டு பிடிப்பதில் அதிகாரிகள் தீவிரமாக ஈடுபட்டிருக்கின்றனராம்.

'திபேத், பன்னெடுங்காலமாக உலகின் இதர பகுதிகளோடு தொடர்புகொள்ளாதிருந்த நிலை தொடர்ந்திடவேண்டும் என்று கருதும் 'பிமாங்' என்று அழைக்கப்படும் 'லாமா' கோஷ்டியின் வேலையாகவே இது இருக்கும்' என்று யூகிக்கப்படுகிறதாம்.

இதனை ஒட்டி சிலர் கைது செய்யப்பட்டிருப்பதாயும் கூறப்படுகிறது இந்த இரகசிய இயக்கத்தை ஒழித்துக் கட்ட அதிகாரிகள் உறுதிபூண்டிருக்கின்றனராம்.

இந்தத் தகவல்களை எல்லாம், திபெத்திலிருந்து வந்துள்ள சில பிரயாணிகள் காட்மண்டுவில் தெரிவித்திருக்கிருர்களாம்.

# '34,500 பேரில் 3-பேருக்கே எழுதப் படிக்கத் தெரியும்'

## அமைச்சர் தரும் தகவல்

சென்னை, மார்ச். 23—

"சென்னை மாநிலத்தில், 34,500 பேர் உள்ள ஒரு வகுப்பினர் இருக்கின்றனர்; இவர்களில் 3 பேரே எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்; அந்த 3 பேரிலும் அதிகப் படிப்பு உள்ளவர் 3-வது 'பாரம்'வரையில் படித்தவர்தான்"

என்று, அமைச்சர் பரமேசுவரன் மேல் (சட்ட) சபையில் கூறியுள்ளார்.

"ஆறு மாவட்டங்களில் இந்த வகுப்பினர் பரவலாக வசிக்கின்றனர்; அரிசன மக்களுக்கு வழங்கப்படும் சலுகைகள் அவர்களுக்கும் வழங்கப்படுகிறது. அவர்களுடைய முன்னேற்றத்திற்காகச் சர்க்கார் தீவிர முயற்சி எடுத்து வருகிறது; ஆனுல், ஒரு குறிப்பிட்ட இடத்தில் அவர்கள் வசிக்காமலிருப்பதுதான் இடையூருக இருக்கிறது" என்றெல்லாம் அமைச்சர் குறிப்பிட்டுள்ளார்.

## மாநில மாநாடு நிதி

★

தி. மு. கழக இரண்டாவது மாநில மாநாட்டு நிதிக்கென தோழர் மு. கருணாநிதி அவர்கள் மூலம் கோலாலம்பூர் தோழர் ஏ. வி. இளஞ்சேரன் ரூ. 30 நன்கொடை அனுப்பியுள்ளார்—பெற்றுக்கொண்டோம்.

—தி. மு. க. தலைமை நிலையம்.

## புயல் நிவாரண நிதி

★

தமிழகப் புயல், வெள்ளச் சேத நிவாரண நிதிக்கென [illegible] தோழர் டி. விசுவநாதன் அவர்களிடமிருந்து தோழர் மு. கருணாநிதி அவர்கள் மூலம் ரூ. 29 தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டுள்ளது—பெற்றுக்கொண்டோம்.

—தி. மு. க. தலைமை நிலையம்.

## அறிவிப்பு

★

'நம் நாடு' இதழ் சம்பந்தப்பட்ட சந்தா-நன்கொடை - ஏஜென்சி பட்டியல் தொகை-விளம்பரக் கட்டணம் ஆகியவைகளை நிர்வாகி, 'நம் நாடு' என்ற முகவரிக்கும், பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டிய செய்திகள், அறிக்கைகள் சம்பந்தப்பட்டவைகளை ஆசிரியர் 'நம்நாடு' என்ற முகவரிக்கும் அனுப்பிவைக்க வேண்டும் எனத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

—நிர்வாகி: 'நம் நாடு'

## தேவை

கீழ்க்கண்ட இடங்களில் 'நம் நாடு' இதழ்களை விற்பனை செய்ய, முன்பணம் கட்டக் கூடிய பொறுப்பு மிக்க ஏஜெண்டுகள் உடனே தேவை:—

திருச்சி
இராசபாளையம்
சிவகாசி
கடையநல்லூர்
திருநெல்வேலி
காஞ்சிபுரம்

—நிர்வாகி: 'நம் நாடு'

# 'தேசீய அபிவிருத்தித் திட்டங்கள் வெறும் பகட்டு; ஏமாற்று வேலை'

## 'சர்வோதய'க் கொள்கைக்கு அப்பாற்பட்டது 'அம்பர் சர்க்கா'

### சர்வோதய ஊழியர் கூட்டத்தில் தேபர்—பாவே தகராறு

அதோனி, மார்ச் 24—

"'சர்வோதய'க் கொள்கைகளுக்கும், கருத்துக்களுக்கும் வெகு அப்பாற்பட்டது, 'அம்பர் சர்க்கார்'; எனவே, சர்வோதய சங்கம், இதைவிட அதிகமான முக்கியப் பிரச்சினைகளில் கவனம் செலுத்தவேண்டியிருக்க, 'அம்பர் சர்க்கா' பிரச்சினையில் தனது காலத்தை வீணுக்கிக்கொள்வது கூடாது"

என்று, திரு. ஜே. சி. குமரப்பா அவர்கள் இங்கு குறிப்பிட்டிருக்கிறார்.

"கிராமத் தொழில்கள், வேலைகள் குறித்து பேசப்படுவதெல்லாம் வெறும் வெளிப்பகட்டு மட்டுமல்லாமல், இரண்டாவது திட்டத்தையே நாசமாக்குவதும்கூட! மேலும் இப்போதிருக்கிற சமுதாய நலத் திட்டங்கள், தேசிய விரிவுபடுத்தும் நிலையங்கள் எல்லாம், தங்கள் நிலைமையை உயர்த்திக்கொள்ளத் தகுந்த திட்ட வேலைப்பாடுகள் தேவை என்று கதறி அழும் ஏழைக் கிராம மக்களை, பாலுக்காக அழும் குழந்தையின் வாயில் வெறும் இரப்பரைத் திணிப்பது போன்ற ஏமாற்று வேலையே தவிர, வேறொன்றுமல்ல" என்றும், அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

அகில இந்திய சர்வ சேவா சங்க ஆதரவில் இங்கு கூட்டப்பட்ட சர்வோதய ஊழியர் கூட்டத்தின்போது, அகில இந்தியக் காங்கிரஸ் தலைவர் தேபருக்கும், ஆச்சாரியா வினோபாபாவேக்கும், அம்பர் சர்க்காவை நடைமுறைக்குக் கொண்டுவரும் பிரச்சினைகளில் தகராறு ஏற்பட்டுள்ளதாகச் செய்திக் குறிப்பொன்று கூறுகிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அம்பர் சர்க்காவின் நிலை குறித்துத் தேபர் விவாதித்துக்கொண்டிருக்கையில், 'தற்போது நாட்டில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பரிசீலனைகள் முடிவுபெறும் வரையில் அம்பர் சர்க்காவை அமுல் செய்வது நிறுத்தப்படவேண்டும்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இதை மறுத்து, ஆச்சாரியா வினோபாபாவே பேசுகையில், 'கிராமங்கள் தங்கள் சுய துணி தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்பதற்கான சாதனமாகக் கருதப்பட்ட 'அம்பர் சர்க்கா'வின் உபயோகம் நிரூபிக்கப்பட்டுவிட்டது. எனவே, சர்க்கார் உடனடியாக அதனை மேற்கொண்டு அமுல் செய்யவேண்டும்; அப்படிச் செய்ய சர்க்கார் தவறுமானால், 'கிராமதான'க் கிராமங்களில் உள்ள தம்முடைய ஊழியர்கள், அந்தந்தக் கிராமங்களில் சர்க்காவை உபயோகித்து, அதனைப் பின்பற்றச் செய்யுமாறு சர்க்காரை வற்புறுத்த முற்படுவார்கள்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் அவர், சமுதாயநலத் திட்டங்கள், தேசிய விரிவுபடுத்தும் சேவை நிலையங்கள் முகாம், சர்க்கார் ஆகியவை, அம்பர் சர்க்காவை அமுல் செய்யவும், அதனைப் பிரச்சாரம் செய்யவும் முன்வரும் என்று தாம் நம்புவதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்.

"ஒளிவு மறைவு இல்லாமல், சர்வோதயத் திட்டங்களையும், கருத்துக்களையும் ஒத்துக்கொள்ளும் அளவிற்குப் பொதுமக்கள் அறிவு நிலை பெற்றிருக்கவில்லை"

என்று, தேபர் குறிப்பிட்டாராம்.

'சர்வோதயக் கருத்துக்களுக்கு ஆதரவாகப் பொதுமக்களின் எண்ணத்தைத் திருப்புவதற்காகச் சர்வோதய ஊழியர்கள் முதலில் பாடுபடவேண்டும்,' என்று அவர் கோரினர்.

தேபர் தொடர்ந்து பேசுகையில், நீர்விசை, உருக்கு, நிலக்கரி, இருப்புப்பாதை, போக்குவரத்து இவைபோன்ற தொழில் துறைகளில் நிர்வாகப் பிரிவினை சாத்தியந்தானு என்பதில் தமக்குச் சந்தேகம் இருப்பதாகவும், எனவே, அடிப்படைத் தொழில்களில் நிர்வாகப் பிரிவினை எந்த அளவு சாத்தியம் என்பது குறித்து சர்வசேவா சங்கம் ஆலோசித்து முடிவுகூற வேண்டும் என்று தாம் கருதுவதாகவும், இப்பிரச்சினைகளில் சர்க்கார் என்ன செய்யவிருக்கிறது என்பதை குறித்து யோசிக்கவேண்டியிருக்கிறது என்றும் தெரிவித்திருக்கிறார்.

'நாட்டில் நிலவிவரும் வேலையில்லாத் திண்டாட்டத்தை, குடிசைத் தொழில்கள் தாங்களாகவே முற்றிலும் நீக்கி விடுமா என்பதிலும் எனக்குச் சந்தேகம் இருக்கிறது"

என்றும், அவர் கூறியிருக்கிறார்.

அடுத்தாற்போல் ஜெயப்பிரகாஷ் நாராயணன், இரண்டாவது திட்டத்தின் குறைபாடுகள் குறித்துப் பேசுகையில், 'அக்குறைபாடுகளைப் பற்றி உறுப்பினர்கள் பேசும்போது, சர்வோதய இலட்சியத்திற்காகச் சர்க்கார் இதுவரையிலும் திட்டமிட்டதே கிடையாது என்பதையும் ஞாபகத்தில் கொள்ள வேண்டும்,' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

### சோவியத் ரஷ்யாவில்......

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வருகின்றனவாம். இதுவரையிலும் 220 ஆங்கில ஆசிரியர்களால் எழுதப்பட்ட 2,244 புத்தகங்களின் 4,80,00,000 பிரதிகள் சோவியத் ரஷ்யாவில் பிரசுரிக்கப்பட்டுள்ளனவாம்.

# திட்டம் தீட்டியது ரூ. 244 கோடி! தேய்ந்து நின்றது ரூ. 116 கோடி!

## 'தொழில் துறையில் பின்தங்கிய ஆந்திரம் அலட்சியப்படுத்தப்படுவது துரதிருஷ்டமே'

### டில்லியின் ஓரவஞ்சனை குறித்து ஆந்திர சட்ட சபையில் குமுறல்

கர்னூல், மார்ச் 24—

"தொழில் துறையைப் பொறுத்தவரையில் ஆந்திர மாநிலம் மிகவும் பின்தங்கிக் கிடக்கிறது. பெரிய தொழில்கள், போக்கு-வரத்துப் போன்ற துறைகளின் அபிவிருத்திக்கான திட்டங்களில், தேவையான அளவிற்கு ஆந்திர மாநிலம் இடம் பெறவில்லை. எனவே இந்த சமத்துவக் குறைபாட்டையும், தேவையையும் தவிர்த்துக்கொள்வது மிக முக்கியமானதும்—அவசியமானதுமாகும்,"

என்று, ஆந்திர மாநில தொழில், திட்ட அமைச்சர் காளா வெங்கடராவ் கூறியிருக்கிறார்.

ஆந்திர சட்டசபைக் கூட்டத்தின்போது பேசிய அமைச்சர் காளா வெங்கடராவ், 'இந்த ஆண்டில் மேற்கொண்டு விதித்திருக்கிற வரிகளால், வருகிற 5 ஆண்டுகளில் ரூ. 11·1 கோடிதான் அதிகமாகச் சர்க்காருக்குக் கிடைக்க இருக்கிறது. இது மிகவும் குறைந்த தொகையானதால், மாநில சர்க்காரின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை அமுல் செய்வதற்குத் தேவையான பணத்தைப் பெறுவதற்கு வேறு ஏதேனும் வரிகள் விதிப்பது குறித்து ஆலோசிக்க வேண்டும்' என்று கூறியிருக்கிறார்.

மாநில சர்க்காரின் இரண்டாவது திட்ட முதலீட்டுத் தொகை, திட்டக் குழுவினுல், ரூ 116·2 கோடியிலிருந்து ரூ. 118·8 கோடியாக உயர்த்தப்பட்டிருப்பதாகவும் அவர் சபையில் தெரிவித்தார்.

முதலில் திட்டக் குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்ட மாநில சர்க்காரின் இரண்டாவது திட்ட நகல் திட்டம் ரூ. 244·43 கோடி மதிப்புடையதாயிருந்தது; ஆனுல் பின்னர், திட்டக் குழு—சர்க்கார் விவாதத்தையொட்டி அது ரூ. 125·1 கோடி மதிப்புடையதாக வெட்டிக் குறைக்கப்பட்டது என்ற தகவலையும் அவர் தந்திருக்கிறார்.

"நாம் மிகக் குறைவான தொகை என்று கருதிய இந்த முதலீட்டுத் தொகையும்கூட, இறுதியாக முடிவு செய்யப்பட்ட தேசியத் திட்டத்தின் ரூ. 116·2 கோடியாக வெட்டப்பட்டு விட்டது. மக்கள் தொகையின் அடிப்படையில் வைத்துக் கணக்கிட்டாலுங்கூட, ஆந்திர மாநிலத்திற்கு ரூ. 123 கோடி ஒதுக்கியாக வேண்டும். ஆனுல் இது குறித்து மாநில சர்க்கார் பிரதிநிதிகளுடன் விவாதித்த மத்திய சர்க்கார் பிரதிநிதிகள், வருகிற 5 ஆண்டுகளில், ரூ. 120 கோடி பெறுமான திட்டத்தை ஏற்று நடத்துவதற்கு ஆந்திர சர்க்கார் முதலீடு செய்யக்கூடிய திறமையின்மீது அவநம்பிக்கை கொண்டு திட்ட மதிப்பைக் குறைத்துவிட்டிருக்கிறார்கள். எனவே, நமது மாநிலம் அபிவிருத்தி அடைந்து, நாமே அதிகமான அளவில் திட்டங்களை மேற்கொள்ளும் வரை, நமது மாநிலத் திட்டத்தின் அளவைப் பெரிதாக்கும்படி வற்புறுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம்."

இவ்வாறு, பேசிய அவர், மேலும் இரண்டாவது திட்டத்தில் ஆந்திர மாநிலத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகை ரூ. 116·2 - கோடியில், முதல் ஆண்டுத் திட்டச் செலவிற்கு ரூ. 19·56 கோடிதான் தரப்பட இருக்கிறது என்ற தகவலையும் வெளியிட்டிருக்கிறார்

மேற்குறிப்பிட்ட தகவல்களைக் குறிப்பிட்டுவிட்டுதொடர்ந்து அவர் பேசுகையில், கனரக மின்சார சாதனங்கள் தயாரிக்கவும், கனரக உருக்குச் சாதனங்கள் தயாரிக்கவுமான ஒரு தொழிற்சாலையை விசாகப்பட்டினத்தில் நிறுவ மத்திய சர்க்காரை அணுக வேண்டும் என்றும், நிலக்கரிப் படிவங்கள் கோதாவரி நதிப் படுகையில் இருக்கிறதா என்பதைக் கண்டறிய ஒரு 'சர்வே' நடத்த மத்திய சர்க்காரைக் கேட்டுக்கொள்ளப் போவதாகவும் அறிவித்திருக்கிறார்.

இவை தவிர, ஐதராபாத் மாநிலத்தைச் சேர்ந்த கொத்தகூடம் என்னுமிடத்திலிருந்து ஆந்திர மாநிலத்திலுள்ள வால்டேர் வரைக்கும் இருப்புப் பாதைகள் போடும்படியும் மத்திய சர்க்காரை வற்புறுத்த இருப்பதாகவும், பரவலான தொழில் உற்பத்தி முறையை யொட்டி, ஆந்திராவில் மேலும் ஒரு செயற்கை உர உற்பத்திச்சாலை நிறுவப்படலாம் என்றும் தெரிவித்திருக்கிறார்.

முதல் ஐந்தாண்டுத் திட்டச் சாதனை குறித்து அவர் பேசுகையில், 'முதலீட்டுத் தொகை ரூ. 69·42 கோடியில் பெரும்பகுதியையும் சுமார் 71 சதவிகிதம்வரை சர்க்கார், கடந்த ஆண்டு டிசம்பர் மாதம் வரையிலும் செலவு செய்திருக்கிறது' என்று தெரிவித்தார்.

தொழில்துறையில் ஒதுக்கப்பட்டிருக்கும் மூலதனம் குறித்து வருத்தம் தெரிவித்துப் பேசுகையில், கம்யூனிஸ்டுத் தலைவர் பி. சுந்தரையா, "மாநில திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகையில் தொழில் அபிவிருத்திக்கென ஒதுக்கப்பட்டிருப்பது சுமார் 25 சதவிகிதமாக மட்டும் இருப்பது வருந்தத்தக்கது". என்று குறிப்பிட்டிருக்கிறார்.

மற்றும் பல உறுப்பினர்கள், விவாதத்தின்போது, ஆந்திர மாநிலம் பெரும் அளவில் உரம் உபயோகித்துவந்தபோதும்கூட, மேற்கொண்டு ஒரு உரத் தொழிற்சாலைக்கு அனுமதி தராமல் இருப்பது மிகுந்த வருத்தத்தை அளிக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்,



### மறைவு

சென்னை, மார்ச் 26—

சூளை வட்ட தி. மு. கழக செயலாளரும், மாவட்டப் பிரதிநிதியுமான தோழர் சு. பாலன் அவர்களின் தந்தையார் சுப்பிரமணியம் அவர்கள் இன்று காலை 10 மணிக்கு இயற்கை எய்தினர். அவருடைய சவம் நாளை (27—3—56) மாலை கல்யாண மேஸ்திரி தோட்டத்திலிருந்து ஊர்வலமாக கிளம்பி அடக்கம் செய்யப்படும்.

அவ்வட்ட தி. மு. க. தோழர்கள் தங்களுடைய ஆழ்ந்த அனுதாபத்தை தந்தையை பிரிந்த சு. பாலன் அவர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகின்றனர். நமது அனுதாபத்தை நண்பருக்கு அறிவித்துக்கொள்ளுகிறோம்.

—ஆ.—ர்.

### பஞ்சாயத்துத் தேர்தல்

அபேட்சகர்களுக்குச் சின்னங்கள்

சென்னை, மார்ச். 25—

பஞ்சாயத்துத் தேர்தலுக்கு, போட்டியிடும் அபேட்சகர்களுக்குக் கீழ்க்கண்ட சின்னங்களை அளிக்க சர்க்கார் முடிவு செய்துள்ளனர். பஞ்சாயத்துத் தேர்லில் கட்சி அரசியலுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதற்காகவே விசேட சின்னங்களை சர்க்கார் ஒதுக்கியுள்ளனர். ஒரு சின்னத்துக்கு பலர் போட்டியிட்டால், 'சீட்டு' போட்டு தேர்தல் அதிகாரி முடிவு செய்வார்.

சர்க்கார் குறிப்பிட்டுள்ள சின்னங்கள் வருமாறு:—வில்லும் அம்பும்; படகு; புஷ்பம்; குடை; குடம்; ஒட்டகம்; இரண்டு இலைகளுடைய கிளை; பறவை; மோட்டார் கார்; நாற்காலி; பூட்டும் சாவியும்; கிணறு.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ

